REGD No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812818 6 பக்கம் விலை 35 காசு



**பண்பாடு**

கருத்து வேறுபாடு இருந்தாலும் பாராட்ட வேண்டியதைப் பாராட்டுவது என்பது தமிழ்ப் பண்பாடு.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**மூட நம்பிக்கை**

பித்தலாட்டம், மத சம்பந்தமான மூட நம்பிக்கைகள் அனைத்தையும் ஒழிக்க வாலிபர்கள் முனைய வேண்டும்.

-தந்தை பெரியார்



மலர் 4 சென்னை 28—9—1980 ஞாயிறு —;(❋);— வெளியூர் 29—9—1980 திங்கள் இதழ் 320

## ஃ கேட்டாலே நெஞ்சம் பதறுகிறது
## ஃ கேள்விப்பட்டோர் மனம் துடிக்கிறது
### ஃ கழகக் காளையரின் நாடி நரம்புகள் புடைக்கின்றன
## ஐந்துகோடித் தமிழர்களின் காவல்அரணும்

# புரட்சித்தலைவரை கொல்ல சதி

## ரெயில் பாதையில் 8 வெடிகுண்டுகள்

### தக்க நேரத்தில் கண்டுபிடித்து தமிழகத்தைக் காப்பாற்றினர் அதிகாரிகள்

வேலூர், செப். 28-ஐந்து கோடித் தமிழர்களின் காவல் அரணாகத் திகழ்கின்ற தமிழக முதல்வர் புரட்சித்தலைவரைக் கொல்ல பயங்கர சதி நடந்தது. அவர் பயணம் செய்த ரயில் செல்லும் பாதையில் எட்டு இடங்களில் வெடி குண்டுகள் வைக்கப்பட்டிருந்தன. தக்க நேரத்தில் அதிகாரிகள் அந்த வெடி குண்டுகளைக் கண்டுபிடித்து அப்புறப்படுத்தியதன் காரணமாக புரட்சித்தலைவர் உயிர் தப்பி தமிழக மக்களின் நெஞ்சங்களில் பால் வார்த்தார்.

கேட்போர் நெஞ்சமெல்லாம் பதற- கேள்விப்பட்டோர் மனமெல்லாம் துடிக்க-கழகக் கண்மணிகளாம் புரட்சித்தலைவரின் உடன் பிறப்புக்களது நாடி நரம்புகள் எல்லாம் புடைக்க - நாசகாலர்கள் நடத்திய இந்தச் செயல் பற்றிய முழு விவரம் வருமாறு :

தர்மபுரி மாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்வதற்காக முதல்வர் புரட்சித்தலைவர் நேற்று இரவு சென்னையிலிருந்து சேலத்துக்கு ரயில் மூலம் புறப்பட்டார்.

இரவு 7.30 மணிக்குப் புறப்பட்ட திருவனந்தபுரம் மெயில் வண்டியில் அவர் புறப்பட்டார்.

### திட்டமிட்ட சதி

இந்த ரயில் புறப்படுவதற்கு ஓரிரு மணி நேரத்துக்கு முன்பாக லாலாஜா ரோடு ரயில்நிலையம்அருகே சோளிங்கர், மகேந்திரவாடி ஆகிய ஊர்களுக்கிடையே ரயில் தண்டவாளத்தில் திட்டமிட்டு சதி செய்து எட்டு வெடி குண்டுகள் வைக்கப்பட்டிருந்தன.

### போலீஸ் விரைந்தது

ரயில் தண்டவாளத்தில் ரோந்து வந்து கொண்டிருந்த ரயில்வே ஊழியர் ஒருவர் இந்த வெடிகுண்டுகளைப்பார்த்து விட்டார்.

உடனே அவர் ரயில் நிலைய அதிகாரிக்குத் தகவல் தெரிவிக்க, ரயில்நிலைய அதிகாரி போலீசாருக்குத் தகவல் தெரிவித்தார்.

தகவல் கிடைத்த போலீசார் வெடிகுண்டுகள் வைக்கப்பட்டிருந்த இடத்துக்கு விரைந்து சென்றனர். உயிரைப் பணயம் வைத்து அந்த வெடிகுண்டுகளைப் போலீசார் அப்புறப்படுத்தினர்கள்.

இந்த வெடி குண்டுகளை நக்சல்பாரிகள் வைத்திருக்கலாம் என்று கருதப்படுகிறது.

புரட்சித்தலைவரைக் கொல்லும் கொடிய நோக்கத்துடனேயே இந்த வெடிகுண்டுகள் வைக்கப்பட்டதாக நம்பப்படுகிறது.

புரட்சித்தலைவர்பயணம் செய்த ரயில் வண்டியானது வெடிகுண்டுகள் வைக்கப்பட்டிருக்கும் இடத்தை அடையும் போது அந்தக்குண்டுகள் வெடிக்கும் வகையில் வைக்கப்பட்டிருக்கலாம் என்று சந்தேகிக்கப்படுகிறது.

தமிழகத்தில் நக்சல்பாரிகளின் வன்முறை நடவடிக்கைகளைத் தடுப்பதில் தமிழக அரசு தீவிரம் காட்டி வருகிறது. இந்த நடவடிக்கையின் எதிரொலியாக பல நக்சல்பாரிகள் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள்.

மூன்று நாட்களுக்கு முன்பு கூட தர்மபுரியை அடுத்த வெத்தலக்காரன்பள்ளம் என்ற இடத்தில் நக்சல்பாரிகள் கூடி புரட்சித்தலைவர் மீது வேல் வீசவும் ரயில்களைக் கவிழ்க்கவும் சதித் திட்டம் தீட்டியது நினைவிருக்கலாம்.

இப்போது ரயில்பாதையில் வெடிகுண்டுகள் கண்டுபிடிக்கப்பட்ட இடம், நக்சல்பாரிகள் நடமாட்டம் அதிகம் உள்ள வட ஆற்காடு மாவட்டம் என்பது குறிப்பிடத்தக்கது.



## புரட்சித் தலைவருக்கு சேலத்தில் சிறப்புமிகு வரவேற்பு

சென்னை, செப். 28- சேலம் வந்த முதல்வர்புரட்சித் தலைவருக்கு சிறப்புமிகு வரவேற்பு அளிக்கப்பட்டது.

சென்னையிலிருந்துநேற்று புறப்பட்டு இன்றுஅதிகாலை சேலத்துக்கு முதல்வர்புரட்சித்தலைவர் ரயிலில் வந்து சேர்ந்தார்.

சோளிங்கபுரம் அருகே ரயில் தண்டவாளத்தில் வெடி குண்டுகள் வைக்கப்பட்டு நாசவேலை முயற்சி நடந்ததைத் தொடர்ந்து ரயில் தாமதமாக வந்து சேர்ந்தது.

ரயில் நிலையத்தில் புரட்சித்தலைவருக்கு சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது. பல்லாயிரக்கணக்கான தோழர்கள் வந்திருந்து வாழ்த்தொலி முழங்கி முதல்வரை வரவேற்றனர்.

குடிநீர் வடிகால் வாரியத்தலைவர் ஈ. ஆர். கிருஷ்ணன், சட்டமன்ற உறுப்பினர்கள் நாமக்கல் அருணாசலம், செம்மலை, சி. வி. வேலப்பன் நாச்சிமுத்து ஜனார்த்தனம் மற்றும் பி. கண்ணன் மாவட்ட ஆட்சித் தலைவர் கருப்பண்ணன் மாவட்ட போலீஸ் அதிகாரி வீரராகவன் ஆகியோர் வந்திருந்தனர்.

சுற்றுலா மாளிகையில் சிறிது நேரம் தங்கிவிட்டு அங்கிருந்து பாப்பிரெட்டிபட்டி திருமண நிகழ்ச்சிக்கு முதல்வர் புரட்சித் தலைவர் புறப்பட்டுச்சென்றார்.

## துறைமுக தொழிலாளர் ஸ்டிரைக் நின்றது

சென்னை, செப், 28- சென்னை துறைமுகத் தொழிலாளர்களின் வேலை நிறுத்தப் போராட்டம் இன்று காலை நிறுத்தப்பட்டது. 13 நாட்களாக இந்த வேலை நிறுத்தம் நடந்து வந்தது.

கப்பல் போக்குவரத்து அமைச்சர் ஏ. பி. சர்மாவுடன் பம்பாயில் நடத்திய பேச்சு வார்த்தையைத் தொடர்ந்துஸ்டிரைக்நிறுத்திக்கொள்ளப்பட்டது என்று சங்கத்தலைவர் அந்தோணிப்பிள்ளை கூறினார்.

## வெடி குண்டு மேல் விவரம்: போலீஸ் தீவிரம்

சென்னை, செப். 28- புரட்சித்தலைவர் ரயில் வரும் முன்னதாக சோளிங்கர் அருகில் ரயில் தண்டவாளத்தில் வெடி குண்டுகள் கண்டெடுக்கப்பட்டன. வெடிகுண்டுகள் பாலித்தீன்பைகளில் வைக்கப்பட்டிருந்தன. அவற்றை எப்படி வெடிக்கவேண்டும் என்ற குறிப்பு ஒன்றும் வெடிகுண்டு இருந்த பைக்குள் கண்டெடுக்கப்பட்டது.

ராணுவத்தில் பயன்படுத்தப்படும் வெடிகுண்டு போல் அவை உள்ளன. அதில் இருந்தகுறிப்புகளைவைத்து சி. ஐ. டி. போலீசார் விசாரணை நடத்துகிறார்கள். நக்சல்பாரிகளின் நாசவேலை முயற்சி இது என்று கருதி போலீசார்தீவிரமாக புலன் விசாரணை நடத்துகிறார்கள்.

## ப. உ. ச. கடிதம்

## திமுக தலைவரின் மாய்மாலம்!

பேரன்புடையீர்,

கேள்விக்கணைகள் என்னைத் துளைத்தவண்ணம் உள்ளன. அவைகளைக் கேலிக்கணைகள் என்று அலட்சியப்படுத்தவில்லை. அலட்டிக் கொள்ளவுமில்லை! விசட்டும்!

வேலைப்பிடித்தவனை காகிதக் கணைகள் என்ன செய்துவிடும்! விவேகமற்றவர்களின் விளையாட்டுக் கணைகள்!

இந்தி வளர்ச்சி காண உலகைச் சுற்றும் தூதுக்குழுவில் தி. மு. க. இடம் பெறலாமா என்றால் இருமொழிக் கொள்கையை விட்டு விட்டோமா என்கிறார்கள்!

**'கன்னிப்பெண் பின்னால் ஏன்டா போகிறாய்' என்றால் 'பிரம்மச்சாரி விரதத்தை விட்டுவிட்டேனா?' என்றானாம்!**

சுற்றுவது கன்னிப்பெண் பின்னால்! கடைபிடிப்பது பிரம்மச்சாரி விரதம்! வேடிக்கை!

மணலை கயிறாகத் திரிப்பதில் தி. மு. க. தலைவர் தனித் திறமை வாய்ந்தவர்.

'பொய்யைத் திரும்பத் திரும்பச்சொன்னால் மெய்யாகிவிடும்' என்பதில் அழுத்தமான நம்பிக்கைக் கொண்டவர்.

"அண்ணா சிலையடியினின்றும் உரையாற்றிய நம் முதல்வர் ஐந்து வருடத்திற்குள் விவசாயி கடன் 240 கோடி ரூபாய் ரத்து செய்யப்படும் என்றாராம்.

தமிழகத்தில் ரூ. 240 கோடி அளவுக்கு ஏழை விவசாயிகள் கடன் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. இப்போதைக்குக் கிடைத்த புள்ளி விபரம் இது. இது கூடலாம் குறையலாம்!

ஏழை விவசாயிகள் கடனை தீர்ப்பதில் தமிழக அரசு திட்டவட்டமான நடவடிக்கைகளை 5 ஆண்டு காலத்திற்குள் எடுக்கும்"— அண்ணா—16-9-80.

இரண்டிற்கும் உள்ள வேற்றுமையைப் பார்த்தீர்களா? ஊன்றிப்படியுங்கள்! மணலைக் கயிறாக்கும் மாய வித்தை தெரியும்.

**விவசாயிகள் கடனைக்காட்டி ஒருகட்சி**

(2-ம் பக்கம் பார்க்க)

### வெடிகுண்டுகள் இருந்த பாதையில் நீங்கள் போகவேண்டாம்
-போலீஸ் அதிகாரிகள்

### ரெயிலில் செல்லும் மக்களுக்கு ஏற்படும் கதி எனக்கும் ஏற்படட்டும்
-புரட்சித்தலைவர்

# மக்களுக்காகத் தன் உயிரைப் பணயம் வைத்த மக்கள் தலைவர்

## முதல்வரின் துணிச்சலான நடவடிக்கை

சென்னை, செப். 28- தாம் செல்ல இருந்த ரயிலில் பயணம் செய்த பொது மக்களின் உயிரை விட தனது உயிர் பெரிதல்ல என்பதை புரட்சித்தலைவர் வெளிப்படுத்தினார்.

நேற்று இரவு ரயில் மூலம் புரட்சித்தலைவர் செல்ல இருந்த பாதையில் 8 வெடி குண்டுகள் வைக்கப்பட்டிருந்தன அல்லவா?

ரயில் தண்டவாளத்தில் வெடிகுண்டுகள் வைக்கப்பட்டிருந்த விவரத்தை புரட்சித் தலைவரிடம் போலீஸ் அதிகாரிகள் தெரிவித்தனர்.

"வெடி குண்டு இருந்த பாதையில் நீங்கள் ரயிலில் போக வேண்டாம். கார் மூலம் வேறு பாதையில் செல்லுங்கள்" என்று புரட்சித்தலைவரிடம் போலீஸ் அதிகாரிகள் கோரினார்கள்.

ஆனால் அந்தக் கோரிக்கையை ஏற்க புரட்சித்தலைவர்மறுத்து விட்டார்.

"ரயில் பாதையில் வெடிகுண்டு வெடித்தால் ஏராளமானபொது மக்களுக்கு அல்லவா ஆபத்து ஏற்படும்? அப்படியிருக்க நான் மட்டும் தப்பிக்க நினைப்பது எப்படி முறையாகும்? பொதுமக்களுக்கு என்ன கதி ஏற்படுகிறதோ அது எனக்கும் ஏற்படட்டும்" என்று புரட்சித்தலைவர் கூறினார்.

பின்னர், ஏற்கனவே திட்டமிட்டிருந்தபடி அதே ரயிலில் புரட்சித் தலைவர் புறப்பட்டார்.

### அமைச்சர் கே. ஏ. கே. அறிவிப்பு

# பட்டு உற்பத்தியில் முதலிடம் பெற அரசு தீவிர திட்டம்

**கோயமுத்தூர், செப். 28- பட்டுவளர்ச்சித் துறையில் முதலிடத்தைப் பெறும் அளவுக்குத் தமிழக அரசு அற்புதமான பல திட்டங்களைத் தீட்டி வருவதாக அமைச்சர் கே. ஏ. கே. கூறினர்.**

கோவையிலுள்ள தமிழ் நாடு வேளாண்மைப் பல்கலைக் கழகத்தில் பட்டு வளர்ச்சி அறிவியல் கருத்தரங்கு நடைபெற்றது. கருத்தரங்கிற்கு வேளாண்மைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் வெங்கட்ராமன் தலைமை வகித்தார்.

இந்தக் கருத்தரங்கில் கலந்துகொண்டு தமிழக ஊரகத் தொழில்துறை அமைச்சர் கே. ஏ. கே. பேசியதாவது:

அகில உலக ரீதியில் கச்சாப் பட்டின் தேவை ஆண்டுதோறும் ஐந்து விழுக்காடு அளவில் உயர்ந்தவண்ணம் இருக்கிறது. 1940-ல் 45000 டன் அளவுக்கு கச்சாபட்டு உற்பத்தி செய்து கொண்டிருந்த ஜப்பான் இன்றைய தினம் 16000 டன் அளவே உற்பத்தி செய்து வருகிறது. கிராமப்புற மக்கள் நகர்ப்புறங்களுக்கு வேலை வாய்ப்பைத்தேடி சென்று விடுவதாலும், வேளாண்மை செய்யப்படுகின்ற மொத்த நிலப்பரப்பு குறைந்த அளவில் இருப்பதுமே இத்தகை வீழ்ச்சிக்கு காரணமாகும் என்று தெரிய வருகிறது.

## சீனாவின் சவால்

ஆனல் இதற்கு மாருக கிராமப்புறங்களில் அதிக ஜனத்தொகை உள்ள சீன தேசமானது இன்று பட்டு உற்பத்தியில் முதலிடம் பெற்று நமது நாட்டுக்கு ஒரு சவாலாக அமைந்திருக்கிறது. இந்த நாட்டின் உற்பத்தித் திறன் குறுகிய கால அளவில் 4500 டன்னிலிருந்து ஆண்டுக்கு 25 ஆயிரம் டன் உற்பத்தி செய்யக் கூடிய அளவை எட்டியுள்ளது. ஆகையால் இதனை ஒருபடிப்பினையாகக் கொண்டு இந்தியாவில் அதிக அளவில் இத்தொழிலில் கிராமப்புற மக்களை ஈடுபடுத்தி கச்சாப்பட்டை உற்பத்தி செய்யும் வாய்ப்பை நன்கு பயன்படுத்துவதற்கும் இதன் மூலம் இந்தியாவின் அத்தியாவசியமான அந்நியச் செலாவணியை நாம் அதிக அளவு ஈட்டுவதற்கும்முயல வேண்டும்.

இன்று நம் நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் பட்டாடைகளுக்கு வெளி நாட்டில் அதிக கிராக்கி ஏற்பட்டுள்ளது. மற்றும் ஏற்றுமதிப் பொருள்களின் தரத்தை நாம் இன்னும் உயர்த்துவோமானல் நமது தரமானபட்டுக்குவெளிநாரகளில் மிகச்சிறந்த வடுவேற்பு இருக்கும் என்பதில் ஐயமில்லை. இத்தருணத்தில் நமது மத்திய அரசு ஆருவது ஐந்தாண்டுத் திட்டத்தின் மூலம் இப்பட்டுத் தொழிலின் உற்பத்தித் திறனை 3500 டன்னிலிருந்து 8000 டன்னுக்கு உயர்த்த திட்டம் வகுத்துள்ளது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். இதன் அடிப்படையில் தமிழ்நாட்டில் பட்டு உற்பத்தியை தீவிரப்படுத்தி அதிக அளவில் உற்பத்தி செய்து கைத்தறி நெசவாளர்களின் தேவையைப் பூர்த்தி செய்வதோடு மட்டுமில்லாமல் வெளிநாட்டிற்கு ஏற்றுமதி செய்யவும் வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

## ரூ. 40 கோடி திட்டம்

தமிழக அரசு இக்கருத்தினை மனதிற்கொண்டு ஆருவது ஐந்தாண்டுக் காலத்தில் ஒருபெரிய அளவில் ரூபாய் 40 கோடி மதிப்பீட்டில் திட்டத்தை உருவாக்கி உள்ளது. இத்திட்டத்தின் முதல் அம்சமாக, இதற்கென ஒரு தனி துறையை ஏற்படுத்தி 1979 ஏப்ரல் திங்களில் இருந்து, சேலத்தை தலைமையிடமாக கொண்டு செயலாற்றி வருகின்றது.

தமிழ் நாட்டில் இயங்கி வரும் 40 ஆயிரம் பட்டுக் கைத்தறிகளுக்கு சுமார் 10 லட்சம் கிலோ கச்சா பட்டு தேவைப்படுகிறது என்று தெரியவருகிறது. இதில் இந்தியாவில் உற்பத்தியாகும் மொத்த பட்டுஉற்பதியில் 25 விழுக்காடு தமிழகத்திற்கு தேவைப்படுகின்றது. ஆனல் இன்றைய நிலையில் தமிழ்நாட்டின் பெரும்பகுதிக்கான தேவையை கர்நாடக மாநிலத்திலிருந்து தான் பெறப்பட்டு வருகின்றது. இதற்கான காரணத்தை ஆராயும்பொழுது பட்டு நூற்பு தொழில் கருநாடக மாநிலத்தில் மிகச் சிறப்பாக அமைந்திருக்கின்றது என தெரிகிறது.

இந்நிலையை, நம் தமிழகமும் அடைய தமிழ்நாட்டிலேயே உற்பத்தியாகும் பட்டுக்கூடுகளை திறம்பட உபயோகித்து நமது கைத்தறி நெசவாளர்களுக்குத் தேவையான கச்சா பட்டை அளிக்க முயற்சிக்க வேண்டும். இதனை கருத்தில் கொண்டு வரும் ஆருவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் சுமார் 40,000 ஏக்கர் அளவில் முசுக்கொட்டை செடி பயிரிடப்படுவதுடன் சுமார் 10 லட்சம் கிலோ கிராம் பட்டு உற்பத்தி செய்யதிட்டங்கள் தீட்டப்பட்டு பரிசிலனையில் உள்ளது.

மேலும் இத்திட்ட காலத்தில் தமிழ்நாட்டில் உள்ள 16 மாவட்டங்களிலும் இப்பட்டுத் தொழிலின் வளர்ச்சியைப் பெருக்க ஏதுவாக10கோடி முட்டைத் தொகுதிகளை உற்பத்தி செய்து பல இளம் பட்டுப்புழுவளர்ப்பு நிலையங்களை நிறுவுவதற்கான வழிவகைகள் செய்யப்பட்டுள்ளன. தனியார் துறையில் பட்டு உற்பத்தியைப் பெருக்க வாய்ப்பளிக்கும் வகையில் சுமார் 5000 பேசின்கள் (ஏனங்கள்) நிறுவ உரிமம் வழங்கப்படுவதுடன், அதிக அளவில் பட்டுக் கூடுகளை வாங்க பட்டுக் கூடு அங்காடிகள் தேவைப்படும் இடங்களில் எல்லாம் திறக்கப்பட உள்ளது.

## முப்பது ஆலைகள்!

இந்த ஆண்டு திட்ட காலத்தில் கூட்டுறவுமுறையில் பட்டு உற்பத்தியைப் பெருக்குவதுடன் அரசு சார்பிலேயே சுமார் 30 நவீனபட்டு நூல் ஆலைகளை நிறுவ முயற்சி எடுத்துக் கொள்ளும். இதன் பயனக வெளிநாடுகளுக்கு ஏற்றுமதிசெய்யும்அளவிற்குநல்ல தரமான பட்டு உற்பத்தியைப் பெருக்க வாய்ப்பு உள்ளது இவ்வாலைகளை நிறுவும் பொழுது அதற்கு தகுந்த தரமான கூடுகளை உற்பத்தி செய்வது மிகவும் அத்தியாவசியம். இதுகாறும் வேளாண் பெருங்குடி மக்களால்வளர்க்கப்படும்'மல்டிவோல்டின்' இனத்திற்கு பதிலாக அதிக அளவு உற்பத்தி- கொடுக்கக்கூடிய 'பைவோல்டின்' இனத்தை உரிய காலத்தில் அறிமுகப் படுத்த ஏற்பாடுகள் செய்யப்பட்டு வரப்படுகிறதுத்

தமிழக அரசு பல்வகை திட்டங்கள் மூலம் இக பட்டுத் தொழிலை அதிப் அளவில் பெருக்குவதுடன் இந்த ஆருவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் சுமார் 3இலட்சம் கிராமப் புற மக்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்க முற்படுவதுடன் அவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தி வளமாக்க வழி வகை செய்யவும் திட்டமிட்டிருக்கிறது.

புதிதாக இத்தொழிலில் ஈடுபடும் வேளாண் பெருங் குடி மக்களுக்கு ஊக்கம் அளிக்கும் வகையில் முசுக் கொட்டைச்செடி பயிரிட விதைக் குச்சிகளை மான்யமாக ஒருஏக்கருக்கு ரூபாய் 200 வீதம் அளிக்கிறது. மூன்று மாத காலத்தில் இத்தொழிலின் பல அம்சங்களின் உத்திகளை மாதம் ரூ. 100 உதவித் தொகையுடன் பயிற்சி அளிக்கப்பட்டு, பட்டுப் புழு வளர்ப்பிற்கு தேவையான சாதனங்கள் இலவசமாகவும் கொடுக்கப் பட்டு வருகிறது. மேலும் விவசாயிகளுக்குத் தேவையான கடன் வசதியைப் பெறும் பொருட்டு நாட்டுடமை யாக்கப்பட்ட வங்கிகளுக்கு பரிந்துரை செய்து பட்டுப் புழு வளர்ப்புகூடங்கள் அமைப்பதற்கும் பட்டுப் புழு வளர்ப்பு சாதனங்கள் வாங்குவதற்கும் வழிவகை செய்து வருகின்றது.

## மான்ய தொகை

பட்டுப்புழு வளர்க்கும் மனை அமைக்கவும் மற்றும் பட்டுப்புழு வளர்ப்பு சாதனங்கள் வாங்குவதற்கும் சுமார் ரூபாய் 375- ஒவ்வொருவருக்கும் மான்யமாக வழங்கப்பட்டு வருகிறது. பட்டு நூல்- நூற்கும் அமைப்புகளை உருவாக்க சிறு தொழில் அமைப்பாளர்களுக்கு ஒரு ஏனம் (பேசின்) அமைக்க கட்டடம் சேர்த்து ரூபாய் 1100 மான்யமாக கொடுக்கப்பட்டு வருகிறது. மற்றும் கிராமப்புறங்களில் கூட்டுறவு முறையில் புதிய பட்டு நூல் உற்பத்தி நிலையங்களை நிறுவ, அரசு தரப்பில், 6 ஏனங்களை (பேசின்) நிறுவ, இயந்திரம் மற்றும் கட்டடம்கட்ட கடன்உதவியாக சுமார் ரூபாய் 6000 கொடுக்கப்பட்டுவருகிறது.

இத்திட்டத்தின் பயனக சுமார் 4000 விவசாயிகள் கிராமப்புறங்களில் 25 கூட்டுறவு பட்டு நூற்பு நிலையங்களை நிறுவி பயன் அடைகிருர்கள் என்று தெரிவித்துக்கொள்ளவிரும்புகிறேன் ஒவ்வொரு வருடமும் சுமார் 6000 விவசாயிகள் இத்திட்டத்தின் மூலம் பயன் அடைந்து பட்டுத் தொழிலின் வளர்ச்சி மேலும் மேம்பாடு அடையும் என்று கூறினல் அது மிகையாகாது. பட்டுநூல் நிலையங்களில் உற்பத்தியான கச்சா பட்டை உரிய காலத்தில் தகுந்தவிலை நிர்ணயிக்கப்பட்டு இடைத் தரகர்களைத் தவிர்த்து, நேரிடையாக பட்டு உற்பத்திச் சங்கங்களுக்கு விற்பனை செய்யும் பொருட்டு முன்னோடியாக பட்டு உற்பத்தியாளர்கள் தொழில் கூட்டுறவு விற்பனை இணையம் ஒன்று காஞ்சி மாநகரத்தில் 1978-ஆம் ஆண்டில் நிறுவப்பட்டு திறம்பட செயல்பட்டு வருகிறது. இவ்விணையத்தின் மூலம் சுமார் 2 கோடி ரூபாய் மதிப்புள்ள தமிழ்நாட்டிலேயே உற்பத்தியான 60000 கிலோ கிராம் பட்டை விற்பனை செய்து இருக்கிறதென்றால் தமிழ்நாட்டில் இத்தொழிலுக்கு எவ்வளவு பெரும் வரவேற்பு இருக்கிறதுஎன்பதை அறியலாம். மேலும் மேலும் உற்பத்தியாகும் பட்டை இவ்விணையத்தின் மூலம் உடனுக்குடன் விற்பனை செய்ய திட்டம் ஒன்றை உருவாக்கி உள்ளது.

வட ஆற்காடு மாவட்டத்தில் ஜவ்வாது, ஏலகிரி மலைச் சாரல்களிலும், சேலம் மாவட்டத்தில் கல்ராயன் மற்றும் கொல்லி மலை, தென் ஆற்காடு மாவட்டத்தில் உள்ள கல்ராயன் மலைப் பகுதியிலும் சுமார் 200 மலைவாழ் மக்கள் குடும்பங்கள் ஈடுபடுத்தப்பட்டு பயன் அடைந்து வருகிருர்கள். இத்திட்டத்தை மேலும் விஸ்தரிக்க வரும் ஐந்தாண்டு திட்டக் காலத்தில் சுமார் 4000 மலை வாழ் மக்கள் குடும்பங்கள் பயன் அடைந்து அவர்கள் பொருளாதார வளர்ச்சி நிலையை மேம்படுத்த முடியும் என்பதில் எனக்கு ஐயமில்லை.

இம்மாதிரி பெரிய திட்டங்கள் போடுவதில் மட்டும் அவர்கள் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்த முடியாது.

## வல்லுநர் சாதனை

இத் திட்டங்களை செவ்வனே செயல்படுத்ததகுந்த பலவகை நுணுக்கங்களையும் புதிய தரமான பட்டுப்புழு இனங்களையும் முசுக்கொட்டை செடி வகைகளையும் இங்கு குழுமியுள்ள பெரும் ஆராய்ச்சி வல்லுநர்கள் அளிக்கும்போதுதான் இத்திட்டங்களின் குறியீட்டை அடைய முடியும்.

இன்றைய நிலையில் ஓரிரு 'பைவோல்டின்' இனங்கள். மக்களுக்கு அறிமுகப்படுத்தப்பட்டு வருகிறது என்று அறிகிறேன். ஆனலும் ஜப்பான் போன்ற பிற வெளி நாடுகளிலிருந்து தருவிக்கப்பட்ட இனங்களின் தரத்தை விடக்குறைவான உற்பத்தித் திறன் கொண்டதாக இருக்கிறது என்பது தெரிய வருகிறது ஆதலால் இங்கு குழுமியுள்ள ஆராய்ச்சியாளர்களுக்கும் தொழில் நுட்ப வல்லுநர்களுக்கும் எனது வேண்டுகோள்என்னவென்றால் நீங்கள் எல்லோரும் முழு மூச்சுடன் ஆராய்ந்து உழைத்து இப்பொழுது வேளாண் துறையில் இருக்கும் பல பயிர்களைப் போல் முசுக் கொட்டைச் செடி மற்றும் பட்டுப்புழு இனங்களை அதிக அளவில் கண்டறிந்து மக்களுக்கு அளிக்கவேண்டும்என்பதே.

## ஈயினல் பாதிப்பு

மற்றும் வேளாண் பெருங்குடி மக்களிடையே பட்டுப்புழு வளர்ப்பில் நோய்வாய்ப்பட்டு அதிக சேதம் அடைந்து வரும் பீதியை அறிந்துகொண்டேன். ஆதலால் நீங்கள் எல்லோரும் ஆராய்ச்சியின் பயனுக இந்த இன்னல்களைத் தவிர்த்து, பலவித நோய்களை எதிர்த்து நல்லமுறையில் வளரக்கூடிய இனங்களை உருவாக்க வேண்டும் என்று மீண்டும் வலியுறுத்திக் கேட்டுக் கொள்கிறேன். மேலும் சமீப காலத்தில் கர்நாடக மாநிலத்தில் 'ஊசி' என்னும் ஒருவித ஈயினால் பட்டுப்புழு இனங்கள் பாதிக்கப்பட்டு அதிக அளவில் சேதம் விளைவிக்கப்பட்டது என்று தெரிந்து கொண்டேன். தமிழ்நாட்டில்இந்தப்பட்டுத்தொழில் இப்பொழுதுதான் தீவிரப் படுத்தப்பட்டு விரிவாகும் நிலையில் உள்ளது. இத்தகைய சமயத்தில் இந்த 'ஈயினல்' பாதிக்கப்படுமேயானல் நாம்அதிகஅளவில் நஷ்டத்தை அடைந்து விடுவோமோ என்று அஞ்சுகிறேன். ஆகையால் நான் மிகவும் உங்களை வேண்டிக் கேட்டுக் கொள்வதென்ன வென்றால் இத்தகைய 'ஈக்கள்' தமிழ் நாட்டில் பரவுவதைத் தடுப்பதோடு மட்டும் நிற்காமல் இதை அறவே ஒழிக்க புதிய உத்திகளைக் கையாளுமாறும் கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் கே. ஏ. கே. பேசினர்.





துறைமுகத் தொகுதியில்

## அமைச்சர் ராஜாமுகமது பங்கேற்ற நிகழ்ச்சிகள்

சென்னை, செப். 28 சென்னை துறைமுகத் தொகுதியில் அண்ணா பிறந்த தின விழாவை ஒட்டி அமைச்சர் ராஜாமுகமது பல்வேறு இடங்களில் கழகக் கொடிகளை ஏற்றுவித்தார்.

46 வது வட்டம் தொடங்கி, 52வது வட்டம் வரை பல இடங்களில் அமைச்சர் ராஜா முகமது கழக கொடிகளை ஏற்றுவித்தார்,

அமைச்சருடன் ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி,மண்ணடி கிருஷ்ணமூர்த்தி எம். வி. ராமன் கு. கஜேந்திரபாபு, பிள்ளை பாக்கம் கே. மூர்த்தி, எம். கணேசன், சி. சோ. சுந்தரம், வி,கே.கபூர் ஆகியோர் பங்கேற்றனர்.

## கழக தோழர்கள் விடுதலை

சென்னை, செப். 28- பல்லவன்போக்குவரத்து கழக ஊழியர்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்ட போது பயணிகள் பாதுகாப்பு பணியில் ஈடுபட்டிருந்தகழகத்தைச்சேர்ந்த கோபாலகிருஷ்ணன்,வேணுதுரை, பார்த்தசாரதி கோவிந்தன், ரசாராம், பாலன், ஜானகிராமன் ஆகியோர் மீது காவல் துறையினர் வழக்கு தொடர்ந்திருந்தனர்.

இந்த வழக்கு எழும்பூர் 5வது மாகாண நீதிபதி முன் விசாரணைக்கு வந்தது.

குற்றம் சாட்டப்பட்டவர்கள் அனைவரும் குற்ற மற்றவர்கள் எனக் கூறி நீதிபதி அனைவரையும் விடுதலைசெய்து தீர்ப்பளித்தார்.

கழகத் தோழர்களுக்காக வக்கில் முத்தையா ஆஜராஞர்.

## ராஜா அண்ணாமலை விழா

சென்னை, செப். 28- ராஜாசர் அண்ணாமலை செட்டியாரின் நூற்றாண்டு தொடக்க விழா இன்று அண்ணா சாலையில் உள்ள ராணி சீதை மன்றத்தில் நடந்தது.

அமைச்சர் அரங்கநாயகம் விழாவைத் தொடக்கி வைத்துப் பேசினர்.

உயர்நீதிமன்ற நீதிபதி டாக்டர் எம்.எம்.இஸ்மாயில் விழாவிற்கு தலைமை வகித்தும், வரலாற்று ஓவியக் கண்காட்சியை திறந்து வைத்தும் பேசினர்.

சென்னைபல்கலைக் கழக துணைவேந்தர் டாக்டர் ஜி. ஆர். தாமோதரன்,மதுரை தமிழிசை சங்கத்தலைவர் லெ. அழகு சுந்தரம் செட்டியார், சென்னை தமிழிசை சங்கத் தலைவர் டாக்டர் எஸ். மகராஜன் ஆகியோரும் விழாவில் கலந்துகொண்டு பேசினர். டாக்டர் எம். ஏ. எம். ராமசாமி அனைவரையும் வரவேற்றுப் பேசினர்.

## கோரக் குப்பத்தில் சக்கரபாணிக்கு பாராட்டுவிழா

சென்னை, செப். 28- பழவேற்காடு பகுதி கோரக்குப்பம் கிளைக்கழகத்தின் சார்பில் பொன்னேரி தொகுதி கழக சட்டமன்ற உறுப்பினர் இரா. சக்கரபாணிக்குபாராட்டுக் கூட்டம் அக்டோபர் 4-ந் தேதி மாலை 4 மணிக்கு கோரக்குப்பத்தில் நடைபெறுகிறது.

எம். தங்கதுரை தலைமை வகிக்கிருர். எ. அப்துல் காதர் வரவேற்புரை நிகழ்த்துகிருர்.

ஆணையூர் இஸ்மாயில், பகுதி அமைப்பாளர் தத்தை அருள், தாமஸ் ராஜன், பாலகிருஷ்ணன், குப்புராஜ், ஏ. டீக. மணி வெங்கடேசன், டி. காதர் பாட்சா, ஈ. கே. ஆறுமுகம், கே. முகமதுயாசின் (தமிழ்நாடு முஸ்லிம்லீக்) ஆகியோர் பாராட்டிப் பேசுகிருர்கள்.

தேசப்பன் நன்றி கூறுகிருர்.

## ப. உ. ச. கடிதம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

உயிர் பிழைக்க முயற்சிப்பது பரிதாபமாக இருக்கிறது.

விவசாய கூட்டுறவு கடன் குறித்து மத்திய விவசாய அமைச்சர் நண்பர் ஆர். வி. சாமிநாதன் கூறியதைப்பற்றி எதும் பேச மறுப்பது, மறைப்பது தி. மு. க. தலைவரின் திறமையைக் காட்டலாம்; ஆனல் உண்மையை மறைக்க முயல்வது 'அறிவுடைமையா' என்று யோசிக்க வேண்டுகிறேன்.

திரும்பத்திரும்ப தமிழக முதல்வர் மீதே குற்றங் கூறுவது தி. மு. க. தலைவரின் கோபத்தையும் குணத்தையுந்தான்காட்டுகிறது! பதவி வெறி பளிச்சென்று தெரிகிறது! பொழுதுவிடிந்தால் பொழுது போனல் விவசாய கிளர்ச்சி வலுப்பெருதா என்று ஏங்கிக் கொண்டிருக்கும் தி. மு. க. தலைவரின் போக்கு நல்லதல்ல!

உள்ளபடியே அக்கறை கொண்டவராக இருந்தால் ரிசர்வ்வங்கி சார்பில் கூறப்பட்டதையும் சேர்த்துச் சொல்ல வேண்டும்.

இதோ ஒரு செய்தி! பெங்களூரில் மாநிலங்களின் கூட்டுறவு அமைச்சர்கள் மாநாடு நடந்திருக்கிறது. அதில் மத்திய விவசாய அமைச்சர் (காபினட் அந்தஸ்து கொண்டவர்) ராவ் பிரேந்தர் சிங் "கூட்டுறவு கடன்களை ரத்து செய்வதை உடனே நிறுத்துங்கள்" என்று கூறியிருக்கிருர். தி. மு. க. தலைவரின் கண்களில் இந்தச்சேதி தென்படவில்லையா? கொட்டை கொட்டை எழுத்துக்களில் சென்னை 27ந் தேதி வெளிவந்துள்ள 'இந்து' பத்திரிகையில் ஆரும் பக்கத்தில் வெளிவந்திருக்கிறதே

### ஒரு நாணயமுள்ள அரசியல்வாதியாக இருந்தால் இதைப் பற்றியுமல்லவா விமர்சிக்க வேண்டும்?

ராவ் பிரேந்தர்சிங் பற்றி எழுதினுல் தமிழக முதல்வரைக் குறை சொல்ல முடியாதே!

மத்திய விவசாய அமைச்சர் ராவ்பிரேந்தர் சிங் கூறியிருப்பது உண்மையிலேயே பாராட்டப் பட வேண்டியதுதான்!

இருக்கும் கடனை ரத்து செய்துவிட்டுப் புது கடன் கொடுத்தால் அதைத் திருப்பிக் கொடுக்கும் எண்ணம் எப்படி வரும்?

விவசாயி வாங்கிய கடனை ரத்து செய்யும் போது அரசு ஊழியர்கள் வாங்கிய கடனை ரத்து செய்ய வேண்டாமா? தொழிலாளி வாங்கிய கடன்-வியாபாரி வாங்கிய கடன்- ஆலை முதலாளி வாங்கிய கடன்- மாநில அரசு வாங்கியுள்ள கடன்- மத்திய அரசு உலக வங்கியில் வாங்கியுள்ள கடன்கள் எல்லாம் ரத்தாகுமா?

தமிழகஅரசின் மீது எப்படியாவது வெறுப் பேற்படுத்த படாத பாடுபடும் தி. மு. க. தலைவருக்குச் சொல்வேன், யாரை அழித்து யாரை வளர்க்கப் பார்க்கிறீர்கள்?

**மொழிக் கொள்கை!**

**மாநில சுயாட்சி!**

**மத்திய அரசின் விவசாயக் கடன் குறித்த கருத்து!**

இவைகளில் தடம் புரண்டு விட்டீர்கள்!
போதை ஏறியவன் கண்களுக்கு விளக்குக் கம்பம் எதிர்க்கும் ஆளாகத்தான் தெரியும்!

தி. மு. க, தலைவருக்குக் 'கோபம்' எனும் போதை அளவுக்கு மீறிவிட்டது!

பொறுமையை இழந்தவனும், பொருமை கொண்டவனும் பூமியை ஆள லாயக்கற்றவர்கள்!

அன்புள்ள

**ப. உ. ச.**

# இதுவும் ஒரு 'கிசு கிசு' தான்!

அவர் ஓகோ என்றிருந்த காலம்! பதவியின் உச்சாணிக் கொம்பில் அப்போது உட்கார்ந்திருந்தார்.

தாம் நினைத்தால் எதுவும் நடக்கவேண்டும் என்ற தடித்தனம் அவரிடம் அளவுக்கு மிஞ்சியிருந்தது.

தமிழகத்தின் மிகப் பெரிய நடிகையாக இருந்த ஒருவர் மீது அந்தப்பெரிய மனிதருக்கு ஒரு கண்!

மில் அதிபரான ஆண் ஒருவரையும் - மறைந்த பிரபல டைரக்டரின் பெயரைத் தன் பெயருக்குப் பின்னல் கொண்ட பெண் ஒருவரையும் அந்த நடிகையின் வீட்டுக்குத் தூது அனுப்பினர்.

போனவர்கள் அந்த நடிகையிடம் 'விஷயத்தை'ச் சொன்னர்கள்.

குணசித்திர நடிப்புக்குச்சொந்தக்காரரான அந்த நடிகை கொதித்தெழுந்தார் - கோபம் கொப்பளிக்கச் சீறினர்-காலில் கிடந்ததைக் கையில் எடுத்துக் கொண்டார்.

தூதுபோனவர்கள் வெலவெலத்துப்போய் வேர்க்க விறுவிறுக்க தப்பித்தோம் பிழைத்தோம் என்று ஓடி வந்து விட்டனர்.

சில நாட்கள் கழிந்தது.

அந்த நடிகையின் தாயார் இறந்து விட்டார்.

உடனே அந்த நடிகைக்குப் போன் செய்து தனது கட்டைக் குரலில் பேசினர்.

உரையாடல் தொடர்கிறது.

"உன் அம்மா இறந்து விட்டாராமே..?"

"ஆமா...!"

"என் அனுதாபங்கள்"!

"நன்றி!"

"ஆமா...சில நாட்களுக்குமுன் இரண்டு பேரை உன்னிடம் அனுப்பியிருந்தேனே... என்ன சொல்லி அனுப்பினய்?"

"அடச்சீ! நீயும் ஒரு பெரிய மனிதன? போனை கீழே வை!"

டக்கென்று போனை வைக்கிருர் அந்த நடிகை.

தொங்கிய முகத்தோடு இந்தப் பெரிய மனிதரும் போனை வைக்கிருர்.

குறிப்பு: இதுவும் ஒரு 'கிசு கிசு' தான்! இனி ஒவ்வொரு வாரமும் 'கிசு கிசு' தொடரும்.

ஆயிரம் விளக்கு தொகுதியில்

## 100 இடங்களில் கொடியேற்றினார் அமைச்சர் கே.ஏ.கே.



சென்னை, செப். 28- அறிஞர் அண்ணாவின் 72வது பிறந்த தின விழாவையொட்டி தமது தொகுதியான ஆயிரம் விளக்குத் தொகுதியில் இன்றுஅமைச்சர் கே.ஏ.கே நூறு இடங்களில் கழகக் கொடியை ஏற்றி வைத்தார்.

ஒவ்வொரு வட்டத்திலும் அவர் பல இடங்களில் பலநிகழ்ச்சிகளில்பங்கு கொண்டார். அமைச்சர் கே. ஏ. கே.யுடன்தொகுதி அமைப்பாளர் அங்கமுத்துவும், மற்றும் ஏராளமான கழகத்தினரும் சென்றனர். அமைச்சர்சென்றஇடத்தில் எல்லாம் அவரைப் பொது மக்கள் உற்சாகமாக வரவேற்றார்கள். பல இடங்களில் கைத்தறி ஆடைகளும், மலர் மாலைகளும் அணிவிக்கப்பட்டன. இன்று காலை முதல் மாலை வரை இந்த நிகழ்ச்சிகளில் அமைச்சர் கே.ஏ.கே பங்கேற்றார்.

### வடபழனி

வடபழனி சிங்காரவேலர் திடலில் பி. அருணாதலைமையில் கு. க. செல்வம் கொடியேற்றிவைத்தார். தி. நகர் மூர்த்தி, மு. சக்தி, கே. கலியமூர்த்தி, தட்சிணா மூர்த்தி ஆகியோர் கலந்து கொண்டனர்.



## திருவான்மியூரில் முனுஆதி பேசுகிறார்

சென்னை, செப். 28- திருவான்மியூர் பலகை வாராவதி திடலில் சத்தியா செல்வன் எம். ஜி. ஆர். நற்பணி மன்றத்தின் சார்பில் வருகிற 30-ந் தேதி (செவ்வாய்க்கிழமை) மாலை 4-30க்கு அய்யா அண்ணா பிறந்தநாள் விழா நடக்கிறது.

கீழசராபில் தாமஸ் பொன்னையா தலைமை வகிக்க எம், எஸ். யூசுப் அப்துல்கரீம் ஆகியோர் முன்னிலை வகிப்பார்கள். ஜி, மூர்த்தி வரவேற்று பேசுகிறார்.

முனுஆதி, ப.நடராசன், கோ.பா.அமிர்தம், பி.டி. ராகவன், டி. கே. சக்கரபாணி, ஆனையூர் இஸ்மாயில், சொ.ஜோதி, தஞ்சை ராமானுஜம், ஜி. அருட்செல்வன் மற்றும் பலர் பேசுகிறார்கள்.

## மெர்சிகிரேஸ் கழகத்தில் சேர்ந்தார்

மதுரை, செப்.28மதுரை மாவட்ட இ. காங்கிரஸ் மாதர் சங்கத் தலைவி மெர்சிகிரேஸ் அந்த கட்சியிலிருந்து விலகி, முதல்வர் புரட்சித்தலைவர் முன்னிலையில் கழகத்தில் சேர்ந்தார். அப்போது அமைச்சர் காளிமுத்து அன்பழகன் எம். பி, வெ. பாலகுரு, எஸ். பாண்டியன் ஆகியோர் உடன் இருந்தனர்.

# அரசை ஏமாற்றும் பஸ் அதிபர்கள், லஞ்சம் வாங்கிய அதிகாரிகள் மீது கடும் நடவடிக்கை

## முதல்வர் அவசர உத்தரவு

**சென்னை, செப். 28-சுற்றுலா பஸ்கள் என்ற பெயரில் அரசை ஏமாற்றிய பஸ் அதிபர்கள் மீதும், அவர்களிடம் லஞ்சம் வாங்கிய அதிகாரிகள் மீதும் கடும் நடவடிக்கை எடுக்க முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவிட்டுள்ளார்.**

சுற்றுலா பஸ்கள் என்ற பெயரால் அரசை ஏமாற்றி தினசரி பஸ்போக்குவரத்து நடத்திய பஸ் அதிபர்கள் மீது நடவடிக்கை எடுப்பது குறித்து முதல்வர் புரட்சித்தலைவருடன் அமைச்சர் முத்துசாமி, உள்துறை இலாகா செயலாளர் சொக்கலிங்கம் போலீஸ் டைரக்டர் ஜெனரல் அப்துல்லா, உஷார் மற்றும் ஊழல் ஒழிப்பு டைரக்டர் நரசிம்மன் ஆகியோர் ஆலோசனை செய்தனர்.

அனுமதியின்றி பஸ் போக்குவரத்துக்களை நடத்தும் சுற்றுலா பஸ் சொந்தக்காரர்களுக்கும் பிரயாண ஏஜண்டுகளுக்கும் உயர் போலீஸ் போக்குவரத்துத்துறை அதிகாரிகள் உடந்தையாக இருப்பது கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

### பட்டியலில் உள்ளோர்

ஆறுடெபுடிபோலீஸ்சூப்பிரண்டுகள், 11 பிராந்திய போக்குவரத்து அதிகாரிகள் உட்பட 161 பேர் 8 சுற்றுலா பஸ் நிறுவனங்களின் பட்டியலில் உள்ளனர்.

எழும்பூரில் இத்தகைய பஸ் போக்குவரத்து நடத்தப்படுகிறது.1979-80ம்ஆண்டில் 261 பேர்களுக்கும் 1.54 லட்ச ரூபாய் லஞ்சமாக தரப்பட்டுள்ளது.

ஒரு மாத காலம் புலன் விசாரணை நடத்திய பின்னர் சென்னை லஞ்சஒழிப்பு உஷார் துறை இந்த மோசடியை கண்டுபிடித்து முதலாவது தகவல் அறிக்கையை (எப்.ஐ.ஆர்.)தாக்கல் செய்தது.

41 இன்ஸ்பெக்டர்களும், 71 சப் - இன்ஸ்பெக்டர்களும், 11 உதவி இன்ஸ்பெக்டர்களும், 13 ஹெட் கான்ஸ்டேபிள்களும், 62 மோட்டார் வாகன இன்ஸ்பெக்டர்களும், 11 ஊழியர்களும் சட்ட விரோதமாக லஞ்சம் வாங்கினர் என்று பஸ் நிறுவனங்களின் கணக்கு புத்தகங்களிலிருந்து தெரிகிறது என்று லஞ்ச ஒழிப்பு, உஷார் துறை டைரக்டர் சி. வி. நரசிம்மன் கூறினார். லஞ்சம் அவ்வப்போது பணமாகத்தரப்பட்டுள்ளது.

சில அதிகாரிகள் சம்பந்தப்பட்டவரை நீண்ட



காலமாக ''மாதாந்திர மாமூலாக பணம்'' தந்துள்ளதாக கணக்கில் எழுதப்பட்டுள்ளது.

அநேக அதிகாரிகளுக்கு இத்தகைய பஸ்களில் நீண்ட தொலைவு பிரயாணம் செல்ல இலவச பஸ்களும் வழங்கப்பட்டிருக்கின்றன.

### ஓட்டலில் வசதி

சில சந்தர்ப்பங்களில் அவர்களுக்கு ஓட்டல்களில் தங்குவதற்கு வசதிகள் செய்து தரப்பட்டிருக்கிறது

பெயர் குறிப்பிடப்பட்ட 261 பேரைத் தவிர அநேக அதிகாரிகளின் வேலையின் பெயர்கள் மட்டும் கணக்குப் புத்தகங்களில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.அவர்களதுபெயர்கள் குறிப்பிடப்படவில்லை.

போலீஸ் போக்குவரத்து அதிகாரிகள் உடந்தையாக இருந்ததைக் காட்டும் தஸ்தாவேஜுகள் செப்டம்பர் 9ந்தேதி நடந்த சோதனையின் போது கைப்பற்றப்பட்டன பஸ்களிலும் அவற்றின்பயணங்களின் போது சோதனையிடப்பட்டன.

இந்த தஸ்தாவேஜுகள் தலைமை பெருநகர் மாஜிஸ்திரேட்கோர்ட்டில்தாக்கல் செய்யப்பட்டன. பின்னர் இவை விரிவானபரிசீலனைக்காக லஞ்ச ஒழிப்பு உஷார் துறைக்கு எடுத்துச் செல்லப்பட்டன.

சுற்றுலா பஸ்களை ஓட்டுவதற்கான விதி முறைகளை மீறி மொத்தம் 74 பஸ்கள் பயன் படுத்தப்பட்டிருக்கின்றன. இவை தமிழ்நாட்டில் ஓடும் மொத்த சுற்றுலா பஸ்களில் 50 சதவிகிதமாகும்.

7 வழக்குகள் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. டெபுடி போலீஸ் சூப்பிரண்டுசி.சுப்பையாதலைமையில் விசேஷ அதிகாரிகள் குழு ஒன்று புலன் விசாரணையை நடத்தி வருகிறது.

சென்னையிலிருந்து கன்னியாகுமரி வரை பல இடங்களுக்கும், மூர்மார்க்கெட்டிலிருந்து பெங்களூர், சேலம், கோவை ஆகிய இடங்களுக்கும் பஸ்கள் ஓடுவது தெரியவந்துள்ளது.

இதுபோன்று அரசை ஏமாற்றும் நோக்குடன் நடத்தப்பட்ட சுற்றுலா பஸ் நிறுவனங்கள் மீதும், அந்த நிறுவனங்களிடம் லஞ்சம் வாங்கிய அதிகாரிகள் மீதும் கடும் நடவடிக்கை எடுக்க முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவிட்டிருக்கிறார்.

37-வது வட்டம் சார்பாக

## அண்ணா பிறந்த தின விழா

சென்னை, செப். 28- அண்ணா பிறந்த தினத்தையொட்டி சென்னை 37-வது வட்டம் அண்ணாபடிப்பகம் சார்பாக 500 பேருக்கு இனிப்பு வழங்கும் விழா இன்று (28ந்தேதி) மாலை 6 மணி அளவில் அயனாவரம் வெள்ளாளத் தெருவில் இரா. வெங்கடேசன் தலைமையில் பகவதி முன்னிலையில்நடைபெறுகிறது. விழாவில் தரங்கை கண்ணன் இனிப்பு வழங்குகிறார். மதுசூதனன் கழகக்கொடியேற்றி வைப்பார்.மற்றும் எத்திராசன், அன்புமணி, சீதாராமன், ஞானகிராமன், நீலகண்டன் தமிழ்மணி மற்றும் மன்ற சார்பு மன்ற நிர்வாகிகள் அவ்விழாவில் கலந்து கொண்டு சிறப்புரையாற்றுகின்றனர்.

### பெரியமேடு

28-9-80 ஞாயிறு மாலை 7 மணிக்கு நேவல் ஆஸ்பிட்டல் ரோடில் எஸ்.ஏ.ஆர். பாண்டியன் தலைமையில் பேசுவோர்:

ஜேப்பியார் எம்.எல்.சி. திருப்பத்தூர் ராமமூர்த்தி அன்புரோஸ், ஆடலழகன், தெய்வசிகாமணி மா. சு. மணி, சுந்தரம், பாலையம், துரையரசன் மற்றும்பலர்.

104வது வட்டம்சார்பாக

## அண்ணா பிறந்ததின விழா

சென்னை, செப்.28 சென்னை 104வது வட்டத்தின் சார்பாக அண்ணா பிறந்த தின விழாவும், கழகக் கொடியேற்று விழாவும்இன்று (28ந்தேதி) காலை 9மணிக்கு நாயர் வரதப்பிள்ளை தெருவில் பா. அங்கமுத்து தலைமையில் பி. ராமமூர்த்தி முன்னிலையில் நடைபெறுகிறது. அமைச்சர் கே. ஏ. கே. கழகக்கொடியை ஏற்றி வைக்கிறார். மற்றும் லட்சுமணன், ஆனந்தன், சுகுமார், ஆகியோர் கலந்து கொண்டு பேசுகின்றனர். தேவராஜு, செயசந்திரன் நன்றி கூறுகின்றனர்.

93-வது வட்டத்தில்

## 36 பேர் கழகத்தில் இணைந்தனர்

சென்னை, செப். 28-சேப்பாக்கம் 93 வட்டத்தில் தி.மு.க மற்றும் இந்திரா காங்கிரஸ் கட்சிகளில் இருந்து முப்பத்தாறு பேர் விலகி அமைச்சர் கே. ஏ. கே. முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

அப்போது கழக தொகுதி அமைப்பாளர் வி. ராஜ்குமார், தொகுதி மகளிர் அமைப்பாளர் கண்ணம்மாள் ஆறுமுகம், 93-வட்ட அமைப்பாளர் இரா. சின்னப்பன், எம். ஜி. ஆர். மன்றச் செயலாளர் டி. முத்து ஆகியோர் உடனிருந்தனர்.

## கோபி தமிழரசு நிகழ்ச்சிகள்

செப். 28 ஏலூர் 29 சத்திரப்பட்டி, 30 அஸ்தம்பட்டி, அக்.1சேலம்,2புதுப்பட்டி, 3 ராசிபுரம், 4 நாமகிரி பேட்டை, 5 புதூர் 6பிடாரியூர். 7,8,9சென்னை 10,11 மதுரை நகரம்

முகவரி- கோபிதமிழரசி இராமன் நகர் (அஞ்) மேட்டூர் அணை 636403.

# சென்னை - டெல்லி நேரடி விமான போக்குவரத்து

## டெல்லி அமைச்சருக்கு மோகனரங்கம் கடிதம்

**சென்னை, செப். 28-சென்னைக்கும், டெல்லிக்கும் இடையே நேரிடை விமானப் போக்குவரத்துக்கு உடனடியாக ஏற்பாடு செய்யவேண்டும் என விமானப் போக்குவரத்து அமைச்சர் ஏ. பி. சர்மாவுக்கு கழக நாடாளுமன்ற உறுப்பினர் மோகனரங்கம் கடிதம் எழுதியுள்ளார்.**

மத்தியஅமைச்சர் ஏ. பி. சர்மாவுக்கு மோகனரங்கம் எழுதியுள்ள கடிதத்தில் குறிப்பிட்டிருப்பதாவது:

சென்னைக்கும் டெல்லிக்கும் இடையில், நிறுத்தி வைக்கப்பட்டுள்ள நேரிடை விமானப் போக்குவரத்தை உடனடியாக துவக்கவேண்டும் என நாடாளுமன்ற உறுப்பினர் என்ற முறையிலும், சுற்றுலா சிவில் விமான போக்குவரத்து கமிட்டி உறுப்பினர் என்ற முறையிலும் கேட்டுக்சொள்கிறேன்.

ஏற்கனவே நிறுத்தப்பட்டிருந்த இந்த நேரிடை விமானப்போக்கு வரத்தை துவக்க வேண்டும் என ஜனதா ஆட்சி காலத்தில் முதல்வர் புரட்சித்தலைவர் வலியுறுத்தினார்.

நாடாளுமன்ற உறுப்பினர் என்ற முறையில் நானும் இக்கோரிக்கையை வலியுறுத்தினேன். இதையடுத்துஅப்போது டெல்லி- சென்னை நேரிடைவிமானப் போக்கு வரத்து துவக்கப்பட்டது.

ஆனால் தற்போது சென்னை-டெல்லி விமானம் ஐதராபாத் சென்று செல்கிறது.

இதனால், சுற்றுலா பயணிகளுக்கும், வியாபாரிகளுக்கும் நீண்ட தூரம் பயணம் செய்ய வேண்டிய நிலையும், வீண் காலதாமதமும் ஆகிறது. ஆகவே சென்னை- டெல்லி நேரிடை விமானப்போக்குவரத்தை உடனடியாக துவக்கக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

### கீழ் திசை நாடுகள்

அதோடு இந்தியாவின் 4 முக்கிய நகரங்களில் ஒன்றான, சென்னையில் இருந்து ஜப்பான் போன்ற நாடுகளுக்கு விமானப் போக்குவரத்து இல்லை.

டெல்லியிலிருந்து ஹாங்காங்கிற்கு செல்ல விமான வசதிகள் இருப்பது போல சென்னையில் இருந்தும் கீழ் திசை நாடுகளுக்கு விமானப் போக்குவரத்துக்கு ஏற்பாடு செய்யவேண்டும்.

சென்னை மீனம்பாக்கம் விமான நிலையம் பெயரளவிற்கு சர்வதேச விமான நிலையமாக உள்ளதே தவிர விமான நிலையம் மேம்படுத்தப்படவில்லை.

ஆகவே சென்னை விமானநிலையத்தை மேம்பாடு செய்வதோடு, சென்னையில் இருந்து கீழ் திசைநாடுகளுக்குவிமானப் போக்குவரத்திற்கும் ஏற்பாடு செய்யவேண்டும் எனக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

தாங்கள் உடனடி நடவடிக்கை எடுத்து, சென்னைக்கும் டெல்லிக்கும் இடையே நேரிடை விமானப் போக்குவரத்துக்கு ஏற்பாடு செய்யக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இவ்வாறு மோகனரங்கம் தனது கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

# நெல்லை-குமரி ரயில்பாதை குறித்து கமலபதியுடன் முத்துசாமி பேச்சு

சென்னை, செப்.28 நெல்லை கன்னியாகுமரி ரயில்பாதை குறித்து மத்திய ரயில்வே அமைச்சர் கமல பதிதிரிபாதியுடன் தமிழக போக்குவரத்துதுறை அமைச்சர் எஸ். முத்துசாமி பேச்சுவார்த்தை நடத்துகிறார்.

நீண்ட நெடுங்காலமாக இருந்துவரும் நெல்லை-கன்னியாகுமரி ரயில் போக்குவரத்துக் குறித்து பேசுவதற்காக தமிழக போக்குவரத்துத் துறை அமைச்சர் எஸ். முத்துசாமி நாளை (29ந்தேதி) காலை 6 மணிக்கு சென்னையிலிருந்து புறப்படும் விமானம் மூலம் டெல்லி செல்கிறார்.

பின்னர் டெல்லியில் மத்திய ரயில்வே அமைச்சர் கமலபதிதிரிபாதியை சந்தித்து நெல்லை-குமரி ரயில் போக்குவரத்து குறித்து உரையாடுகிறார்.

மாலை 5மணிக்கு டெல்லியிலிருந்து புறப்பட்டு சென்னை வந்து சேருகிறார்.

## பேச்சாளர் முகவரி

பலகுரல் கேரளா
திருமதி விஜயராஜன்
நெ, 42
பெரியசெட்டி தெரு
திருச்சி 620008

## கேள்வி - பதில்

கேள்வி: 'தகிடுதத்தம்' என்றால் என்ன?

பதில்; 'முரசொலி'யின் மாற்றுப் பெயர்!

அரசு உத்தரவுக்கு

## மார்க்கெட் கமிட்டி பணியாளர் சங்கம் பாராட்டு

கோவில்பட்டி, செப்.28 மார்க்கெட் கமிட்டிகளில் பணிபுரியும் காவலர் துப்புரவாளர் மற்றும் தோட்டக்காரர் ஆகியவர்களின் பணிகளை நிரந்தரமாக்கி கழக அரசு உத்தரவிட்டுள்ளது தெரிந்ததே.

ஊழியர்களின் கோரிக்கையை ஏற்று உத்தரவிட்டுள்ள அரசுக்கு தமிழ்நாடு மார்க்கெட் கமிட்டி பணியாளர் சங்கம் பாராட்டு தெரிவித்துள்ளது.

சங்கத்தலைவர் டி. கோபாலகிருஷ்ணன், பொதுச்செயலாளர் ஆர். பாலல்ராமசாமி இணைச் செயலாளர் பாலகிருஷ்ணன் ஆகியோர் தமிழக அரசுக்கு பாராட்டுத் தெரிவித்து அறிக்கை வெளியிட்டுள்ளனர்.



● 'ஒப்பந்தம்' படத்தில் ஸ்ரீபிரியா

## எக்ஸ்ரே எக்ஸ்ரே எக்ஸ்ரே எக்ஸ்ரே எக்ஸ்ரே எக்ஸ்ரே

### வசந்த அழைப்புகள்

கிராம மக்களுக்குத் தொண்டு செய்ய வருகின்ற ஒரு டாக்டரின் பார்வை யாருமற்ற ஒரு ஏழைப் பெண்ணின்மீது பதிகிறது. அவளையே துணைவியாக்கிக் கொள்கிருர். மருத்துவ மனையில் நோயினுல் அவதிப்படும் இளம் பெண் ஒருத்தியிடம் அவர் காட்டும் பரிவைத் தவருகக் கதைகட்டி அவரது மனைவியின் மனதில் சந்தேகப் புயலைஎழுப்பிவிடுகின்றனர் ஒன்றுபட்ட உள்ளங்கள் பிரிகின்றன. மனைவியின் அரவணைப்பிற்காக ஏங்குகிற பண்பே உருவான டாக்டர், தன்னைத் தேடி நம்பிக்கையோடு வந்த ஒரு பெண்ணை சூழ்நிலையின் காரணமாக கெடுக்க முயற்சிக்கும் போது...

எதைச் சொன்னுலும் கதையின் முடிவைச் சொல்லக்கூடாது!

முடிவு பிரமாதம்!

ஜேப்பியாரின் கதைக்கு திரைக்கதை, வசனம், பாடல்களை எழுதி இசையமைத்து படத்தைஇயக்கியுள்ளார் ராஜேந்தர்.

மண்ணிலிருந்து வெட்டி எடுக்கப்பட்ட தங்கத்தை அப்படியே பயன்படுத்த முடியாது. மண்ணை அகற்றி, பொன்னை உருக்கி செம்பு கலந்துதான் தங்கமாக்கி நகை செய்யவேண்டும்.

வைரத்தைப் பட்டை தீட்டினுல்தான் ஒளிவீசும். ராஜேந்தர் வெட்டி எடுக்கப்பட்ட பொன்; பட்டை திட்டப்பட வேண்டிய வைரம் என்பது படத்தைப் பார்க்கின்ற போது தெரிகிறது.

ரவீந்தர், ரூபா, விஜயன், உஷாஆகியோர் நடிக்கும் ஜேப்பியார் படைத்த கதாபாத்திரங்கள் உயிரோட்டமானவை-திரைக்கதை நன்ருக இருந்திருந்தால் இன்னும் எடுபட்டிருக்கும்.

'மொட்டு மொட்டு ஜாதி முல்லை', 'கங்கை பொங்குது கண்கள் ஓரம்' பாடல்களும் இசையமைப்பும் இனிமையோ இனிமை! பாடல்கள் யாவும் சிறப்பாக உள்ளன.

'புடவை பெண்ணிலே பாதி, மண்ணிலே பாதி, என்ற சுவையான வசனங்கள் ஆங்காங்கு மின்னுகின்றன.

தண்ணீர் தேங்கியுள்ள இடத்தில் ஒருவரை பார்த்தபடி ஒருவர்- விஜயனும் ரூபாவும் விழுவது நன்ருக இருக்கிறது! உண்டியலில் விஜயனின் நோட்டின் மீது 5 காசு விழுவதும் நல்ல நயம்.

ரவீந்தர்முரட்டுத்தனம், உஷாவின் குறும்புத்தனம், விஜயன், ரூபாவின் ஊடல்கள் ரசிக்கும்படி உள்ளன.

ஜேப்பியார் மூன்று காட்சிகளில்வருகிருர். இயற்கையாக வழக்கம் போல் பேசி நம்மைக் கவர்கிருர்.

• ஜெயமணிக்கு நல்லதொரு வேடம்-பாராட்டுப் பெறுகிருர். செல்வராஜ், நாமகிரிப்பேட்டை முருகேசன், தாஸ் ஆகியோர் சிறப்பாகச் செய்துள்ளனர்.

கவுண்டமணி நன்கு நடித்துள்ளார். ராஜேந்தர் நடித்திருக்கிருர்- வில்லனுக!

கிளைமாக்ஸ் காட்சியை ராஜேந்தர் சிறப்பாகப் படமாக்கியுள்ளார்.

**அழைப்பில் மட்டுமல்ல, படத்திலும் வசந்தம் உண்டு!**

### மீனுட்சி

'எங்கவீட்டுப் பிள்ளை', 'கல்யாணராமன்' பிராண்ட் கதாநாயகன். அவன் தந்தையை, பாம்பை கடிக்கவிட்டு சாக அடிக்கிருன் சித்தப்பன். பிள்ளையையும் தீர்த்துக் கட்ட முயற்சிக்கும் போது காதலியால் காப்பாற்றப்பட்டு வீரனுக்கப்படுகிருன். அவன் தனது சித்தப்பனை சாட்டையால் அடித்துத் துரத்துகிருன்.

மான் நன்ருக நடித்திருக்கிறது. அத்துடன்தீபாவும் நன்ருக நடித்திருக்கிருர். விஜய்பாபு அப்பாவியாகவும், வீரம்வந்தவராகவும் நடித்திருக்கிருர்.

வி.கே.ராமசாமி, சுருளிராஜன், சச்சு, சுமிதா, அசோக், ஹரிகுமார் ஆகியோர் சிறப்பாகச் செய்திருக்கின்றனர்.

சுருளிராஜனைப் படுக்க வைத்துவிட்டு துணியை விரித்து குரங்கு காசு வசூல் செய்வது நன்ருக இருக்கிறது.

நாட்டியமாடினுல் பாம்பு உடனே புறப்பட்டுச்

(1-ம் பத்தி பார்க்க)



● 'அழைத்தால் வருவேன்' படத்தில் சுமலதா

## ★ அட்வான்ஸ் வாங்கிக் கொண்டு நடிக்க மறுத்த சுபாஷிணி ★

ரவீந்தருடன் கதாநாயகியாக நடிக்க 'மலரும் நினைவுகள்'படத்திற்காகஒப்பந்தம் செய்து முன்பணம் பெற்றுக்கொண்ட சுபாஷிணி படப்பிடிப்பு தொடங்கிய நேரத்தில் நடிக்க மறுத்துவிட்டதாக டைரக்டர் பரமேஸ்வரன் தெரிவித்துள்ளார்.

திடீரென்று இவ்வாறு கூறியதால் அந்தக் கேரக்டருக்கு ஒரு நடிகையைத் தேடவேண்டியநிர்ப்பந்தம் ஏற்பட்டது.

கதை அமைப்பின்படி ரவீந்தருக்கு ஜோடியாக நடிப்பவர் அவருக்கு இணையாக நடனம் ஆடவேண்டும். நாகரிக நங்கையின் தோற்றம் கொண்டவராகவும் இருக்கவேண்டும்.

பல புதுமுகங்களை சந்தித்தோம்; இருபதுக்கு மேற்பட்டவர்களைப் பார்த்தோம். இறுதியில் கான்வெண்ட் மாணவி ஷைரா பானுவுக்கு வாய்ப்புக் கிடைத்தது. இரவு 10 மணிக்கு ஒப்பந்தம் செய்து காலையில் படப்பிடிப்பில் அவரும் கலந்து கொண்டார்.

ஒரு நடிகையைத் தேர்ந்தெடுத்து, ஒப்பந்தம் செய்யும் சமயத்தில் இன்னெரு நடிகையைப் பார்க்கலாம் என்று சொல்லுவார்கள். இப்படியே பல நடிகைகள் தங்கள் வாய்ப்புக்களை இழக்கும்படி நேரிட்டுவிட்டது. பலருக்கு ஏமாற்றம் ஏற்படும்படி ஆகிவிட்டது.

இதற்காக அந்த நடிகைகள் தங்களை மன்னிக்கும்படி 'மலரும் நினைவுகள்' டைரக்டர் எம். ஆர். பரமேஸ்வரன், தயாரிப்பாளர் கம்பம் கே. எம். எஸ். இருவரும் கேட்டுக்கொண்டுள்ளனர்.

இந்தப் படத்தில் சுதாகர், சுமதி, சுருளிராஜன்' மனோரமா, உசிலை மணி ஆகியோரும் நடிக்கின்றனர். வி.எஸ்.ஆர். சுவாமி ஒளிப்பதிவு செய்கிருர்.

எம். ஆர். பரமேசுவரன் கதை- வசனம் எழுதி இயக்குகிருர். கம்பம் கே. எம். எஸ். தயாரிக்கிருர்.

## சேதி தெரியுமா?

### தமிழ்ப் படத்தில் இந்திப் பாடல்

மகேந்திரன் திரைக்கதை வசனம் எழுதி டைரக்ட் செய்யும் படத்தில் இந்திப் பாடல் ஒன்று இடம் பெறுகிறது. இளையராஜா இசையமைப்பில் பி.பி.சினிவாஸ் எழுதிய பாடலை பிரபல இந்திப்பாடகர் பூபேந்தர் சிங்,ஜானகியுடன் இணைந்து பாடியுள்ளார்.

கதைப்படி கதாநாயகன் வடஇந்தியாவைச் சேர்ந்தவன். அவன் பாடுவதாக இந்தப் பாடல் அமைந்துள்ளது. அத்துடன் படத்தில் நான்கு காட்சிகளுக்கு மேல் இந்தியிலேயே இருக்கும். ஆனுல் புரியும்படி இருக்கும்.

ஃ ஃ ஃ

### சாருலதாவுக்கு வாய்ப்பு பறிபோனது!

பூட்டாத பூட்டுகள் படத்தின் கதாநாயகி சாருலதாவை ஒரு பிரபல டைரக்டர் தனது படத்தில் முக்கிய வேடத்தில் நடித்தே தீரவேண்டும் என்று பிடிவாதமாகக் கூறியுள்ளார் ஆனுல் படப்பிடிப்பிற்கு இரண்டு நாட்களுக்கு முன்பு அந்த வாய்ப்பு வேறுநடிகைக்குப் போய்விட்டது.

சாருலதா நடன அமைப்பாளர் ரகுவின் மைத்துனி கதாநாயகியாக நடித்து விட்டதால் நடன உதவியாளராகப் பணியாற்றுவது கௌரவக் குறைவு என்று கருதாமல் இப்போதும் ரகுவின் உதவியாளராகப் பணியாற்றுவது பாராட்டுவதற்குரியது.

(6ம் பத்தி தொடர்ச்சி)

சென்றுஉரியவரைக்கடித்து விட்டு வந்துவிடுமா?

பாம்புபோல் வளைந்து நெளிந்து ஆடும் நாட்டியம் நன்ருக இருக்கிறது!

வி. கே. ஆரை அடிக்கும் போது வேட்டியையும் சுமிதாவை அடிக்கும் போது புடவையையும் துவைப்பதுபோல் காட்டியிருப்பது ராம- நாராயணன், சுந்தசாமியின் நல்ல டைரக்ஷன்.

'அடடா ஒரு உயிர் துடிக்குது' என்ற புலமைப் பித்தன் பாடல் சங்கர்-கணேஷ் இசையமைப்பில் இனிமையாக உள்ளது. லோகேஷ் ஒளிப்பதிவு தரமாக உள்ளது.

**'மீனுட்சி'யை மானும், குரங்கும் காப்பாற்றி இருக்கின்றன!**



● 'மூடுபனி' படத்தில் ஷோபா

## வளரும் படங்கள்

நாகூர் ஆண்டவர் பிக்சர்ஸ் வண்ணப்படம் ஒன்றைத் தயாரிக்கிருர்கள்புதுமுகங்கள் பலர் நடிக்கும் இப்படத்தின் நட்சத்திரத் தேர்வு நடை பெற்று வருகிறது.

மனதை நெகிழவைக்கும் சம்பவங்கள் பல கொண்ட முற்றிலும் மாறுபட்ட குடும்பக்கதை அமைத்து, தயாரிப்பாளர் கதிரவன் படத்தை இயக்குகிருர்.

எம்.திருவேங்கடம் டைரக்ஷன் மேற்பார்வையைக்கவனிக்கிருர்.

விஜயராகவன் ஒளிப்பதிவு செய்கிருர்.

### ராண்டார்கை இயக்கும்படம்

கோல்டன் பெல் கிரியேஷன்சார் சார்பில் ராண்டார்கையின் 'திரிவஞ்ச்' என்ற ஆங்கில நாவல் 'காகா பலராம்' என்ற பெயரில் உருவாகிறது.

இதற்கான ஆங்கிலப் பாடல்சாரதா ஸ்டுடியோவில் ஒலிப்பதிவானது. ஷெர்லி ஸ்மித் பாட ஜோசப் கிருஷ்ணு இசையமைத்தார்.

ராண்டார்கை திரைக்கதை வசனம் எழுதி டைரக்ட் செய்கிருர்.

வசந்தன் பெருமாள்தயாரிக்கிருர். யு.ராஜகோபால் ஒளிப்பதிவு செய்கிருர். பிரேம், ரவிசங்கர் ஆகிய புது முகங்கள் நடிக்கின்றனர்.

### எவர்கிரீன் மூவிடோனின் 'உயிருள்ளவரை'

எவர்கிரீன் மூவிடோன் நிறுவனத்தினர் 'உயிருள்ளவரை' என்ற படத்தைத் தயாரித்து வருகின்றனர்.

ஒளிப்பதிவு செய்து பாபு மகேந்திரா தயாரிக்கும் இந்தப் படத்தை முரளிமோகன்கதைவசனம் எழுதி டைரக்ட் செய்கிருர்.

இசைராணிஇசைஅமைக்கிருர்.

புதுமையான கதையமைப்பு கொண்ட இந்தப் படத்தில்தீபா,ஜெயமாலா, பொன்னி,சுமங்கலி,கங்கா, இந்திராணி, ஸ்ரீவள்ளி, லட்சுமி கலா, ஆகியோர் நடிக்கின்றனர்.

புதுமுகங்கள் பலர் முக்கிய வேடத்தில் நடிக்கின்றனர். படம் வேகமாக வளர்ந்து வருகின்றது,

### விஜயன்

நடிகர் விஜயன் அந்த நடிகையைத் திருமணம் செய்துகொள்ளப் போகிருர். இந்த நடிகையைத்தான் திருமணம் செய்து கொள்வார் என்ற பரபரப்பான செய்திகள் வந்துகொண்டிருந்தன.

எந்த பரபரப்பும் இல்லாமல் விஜயன் கேரள முதல்வரின் உறவுப்பெண்ணை மணந்து கொண்டு சென்னை திரும்பியுள்ளார்.

## 'மாதவி வந்தாள்' படத்துக்குதடை

நாத்திகம் ராமசாமி கதை வசனம் எழுதி டைரக்ட் செய்யும் 'மாதவி வந்தாள்' வண்ணப்படத்துக்கு சென்சார் தடை விதித்துள்ளது.

இந்தப் படத்தில் இடம் பெற்றுள்ள சில காட்சிகள் இருக்கக் கூடாது என்று தணிக்கைக் குழுவினர் ஆட்சேபணை தெரிவித்துள்ளனர். இதன் காரணமாக 3-ஆம் தேதி வெளிவர வேண்டியபடம் வரவில்லை.

இந்தப் படத்தில் விஜய்பாபு, வடிவுக்கரசி, குமாரிராஜி, வி. கே. ராமசாமி, காந்திமதி, வி. எஸ். ராகவன், பண்டரிபாய், எஸ். என். கிருஷ்ணன், பி. பி. சுப்பையா, வெங்கட்ராமன், குமாரி சச்சு, சிலோன் மனோகர், தாம்பரம் லலிதா, மதுமாலா ஆகியோர் நடித்துள்ளனர். தத் ஒளிப்பதிவு செய்துள்ளார். கண்ணதாசன் பாடல்களுக்கு சந்திரபோஸ் இசையமைத்துள்ளார்.

### 'புதியவர்கள்' படத்தில் அண்ணுநம்பி நடிக்கிருர்

எம். பி. ஜி. கிரியேஷன் சார் 'புதியவர்கள்' என்ற வண்ணப் படத்தைத் தயாரிக்கின்றனர்.

அமைச்சர் குழந்தைவேலு துவக்கி வைத்தார்.

கோவையை அடுத்த செம்மேடு, பூண்டி அடிவாரம் ஆகிய பகுதிகளில் படப்பிடிப்பு நடந்து கொண்டுள்ளது.

சந்திரஹாசன், வனிதாஸ்ரீ ஆகியோருடன் கழகப் பேச்சாளர் அண்ணுநம்பி முக்கிய வேடத்தில் நடிக்கிருர்.

கௌரி,மதுரைஜெயந்தி, விருதை சண்முகசுந்தரம், பாபு, சுமங்கலி, மணியன் ஆகியோர் நடிக்கின்றனர்.

எம். பழனிச்சாமி கதைக்கு முத்தரசன் திரைக்கதை வசனம் எழுதியுள்ளார்.

அழகுராஜா டைரக்ட் செய்கிருர். ராஜா ஒளிப்பதிவு செய்கிருர். சங்கர்கணேஷ் இசையமைக்கிருர். புலவர் புலமைப்பித்தன், வைரவன், பூவைசெங்குட்டுவன் ஆகியோர் பாடல்களை எழுதியுள்ளனர். தெவிசாமணி தயாரிக்கிருர். 7ஆயிரம் அடிகள் வளர்ந்துள்ள இந்தப்படம் விரைவில் வெளிவருகிறது.



● 'மாட்டுக்காரி' படத்தில் ரதி பால் கறக்கிருர்

## கலை விருந்து



● 'வண்டிச்சக்கரம்' படத்தில் சிவகுமார், சரிதா

## வளரும் படங்கள்

### ரகுமாயி ராமன் பின்னணி பாடினுர்



''விடியத் துடிக்கும் ராத்திரிகள்'' என்ற வண்ணப் படத்தில் ரகுமாயி ராமன் பாடல் ஒன்றைப் பாடியுள்ளார்.

''காதல் வைகறையே வா...'' என்ற இளமுருகு எழுதிய பாடலை ரகுமாயி பாடினுர்,

ஆர். ராமானுஜம் இசையமைப்பில் வாகினியில்பாடல்ஒலிப்பதிவுசெய்யப்பட்டது.

கதை, திரைக்கதை, டைரக்ஷனை ஜீவி பிரேம் ஏற்றுள்ளார். கவிஞர் இளமுருகு வசனம் எழுதுகிருர் கமல் தயாரிக்கிருர்.

### வறுமையின் நிறம் சிகப்பு

பிரேமாலயாவின் 'வறுமையின் நிறம் சிகப்பு' படம் தீபாவளியன்று வெளிவருகிறது.

கமலஹாசன், ஸ்ரீதேவி, எஸ். வி, சேகர், ஒருவிரல் கிருஷ்ணுராவ், ஓவியர் பரணி ஆகியோர் நடிக்கிருர்கள்.

கண்ணதாசன் பாடலுக்கு விஸ்வநாதன் இசையமைக்கிருர்,

லோகநாத் ஒளிப்பதிவு செய்கிருர். ஆர். வெங்கட்ராமன் தயாரிக்கிருர்.

கதை. வசனம் டைரக்ஷனை கே. பாலச்சந்தர் கவனிக்கிருர்.

### ★ நட்சத்திர திருமணங்கள்

நடிகர் திருமுருகனுக்கும் நடிகை வசந்திக்கும் திருமணம் நடந்துவிட்டது. அவர் இணைந்து நடித்து கடைசியாக வெளிவந்த படம் 'ஊமை கனவு கண்டால்!' இப்போது வசந்திக்கு 7 மாதமாம்.

## இது செய்தி

### உண்மை கதை படமாகிறது

அறுபது ஆண்டுகளுக்கு முன்பு சேலம் குரால்நத்தம் கிராமத்தில் நடந்த உண்மைக்கதையை ஜெய அனுமந்தா பிக்சர்சார் ''சேவல் துடிக்கிறது நியாயம் பிறக்கிறது'' என்ற பெயரில் தயாரிக்கின்றனர். டி.ஆர். துரைராஜ் கதை எழுதி டைரக்ட் செய்கிருர்.

ஃ ஃ ஃ

### 'பசி' வசூல் சாதனை

சிங்கப்பூரிலும், மலேசியாவிலும் 50 நாட்களுக்கு மேல் 'பசி' வெற்றிகரமாக ஓடிக் கொண்டிருக்கிறது. 'உலகம் சுற்றும் வாலிபன்' படத்திற்கு அடுத்து வசூலில் சாதனை படைத்துள்ளதாம் துரையின்'பசி' படம் அங்கே!

ஃ ஃ ஃ

### சிவசங்கரி கதைகள்

கதாசிரியை சிவசங்கரியின் கதைகளுக்கு திரையுலகில் அதிக வரவேற்பு ஏற்பட்டுள்ளது. அவர்எழுதிய 47 நாட்கள் என்ற கதையை கே.பாலச்சந்தர் டைரக்ட்செய்துஉருவாக்குகிருர். டைரக்டர் மகேந்திரன் 'நண்டு' கதையைப் படமாக்கி வருகிருர்.

ஃ ஃ ஃ

### பாரதிராஜாவின் திருப்பம்

ஒரு சமயத்தில் ஒரு தமிழ்ப்படத்தைத்தான் இயக்குவது என்று உறுதியாக இருந்த பாரதிராஜா இப்போது இரண்டாவது படத்தையும் இயக்க ஒத்துக்கொண்டுள்ளார், தனது சொந்தப் படமான 'நிழல்கள்' படத்துடன், இளையராஜாவின் இன்னெரு படத்தையும் இயக்குகிருர்! இதுசரியான திருப்பம் தான்! இந்தப் படம் வெற்றியடையும் என்று இப்போதைய நிலையில் எவரும் சொல்லிவிட முடியாது என்று பாரதிராஜாவே சொல்லியிருக்கிருர்.

Published by K. Ravindran on behalf of Thangamani Publications, 275. Avvai Shanmugam salai, Madras-14 and printed by him at print House, 1, First Main Road, United India Colony, Madras-24.
Editer:
E. PARASURAMAN

6-வது நாளாக தொடரும் யுத்தம்:

# ஈராக் தலைநகர் மீது ஈரான் ஆவேச தாக்கு

ஈரான் நாட்டில் நீண்ட தூரம் உட்புகுந்து ஈராக் குண்டுவீச்சு

**லண்டன், செப். 28- ஈரான்-ஈராக் நாடுகளுக்கு இடையே 6 நாட்களாக தொடர்ந்து நடக்கும் யுத்தத்தில் ஈராக் நாட்டு தலைநகர் மீது ஈரான் ஆவேச தாக்குதல் நடத்தியது. ஈரான் நாட்டில் பல மைல் தூரம் உட்புகுந்து ஈராக் குண்டு வீச்சு நடத்தியது.**

கடந்த ஆறு நாட்களாக தொடர்ந்து நடைபெறும் யுத்தத்தில், ஈரான் நாட்டு போர் விமானங்கள், பாக்தாத்துக்கு 140 மைல்கள் வடக்கேயுள்ள கிர்குக் பகுதியில் எண்ணெசேமிப்பு கிடங்குகளை குறிவைத்து தாக்கின.

கிர்குக் விமான நிலையத்தையும், அங்குள்ள செய்தி போக்குவரத்து அமைப்புகளையும், ஈரான் நாட்டு விமானங்கள் குண்டு வீசித் தாக்கி அழித்தன.

ஈராக்நாட்டு தலைநகரான பாக்தாத் மீதும் ஈரான் நாட்டுவிமானங்கள் மூன்று முறை தாக்குதல் நடத்தின.

ஈரான் - ஈராக் நாடுகளுக்கு இடையேயுள்ள சத்-அல்-அராப் நீர்வழிப்பாதை நெடுக, யுத்தம் கடுமையாக நடந்து கொண்டுள்ளது.

ஈரான் நாட்டில் அப்தான் பகுதியில் ஈராக் நாட்டுப் படைகளை எதிர்த்து ஈரான் படைகள் கடுமையாக தாக்கின.

## ஆவாஸ் வீழ்ச்சி

ஈரான்நாட்டின் முக்கிய நகர்களில் ஒன்றான ஆவாஸ் நகரை ஈராக் படைகள் கைப்பற்றின.

ஈரான் தலைநகர் அருகேயுள்ள எண்ணெ சுத்திகரிப்பு ஆலைமீது ஈராக் படைகள் கடும் தாக்குதலை நடத்தின.

ஈரானின் மிகபெரிய எண்ணெ ஏற்றுமதி சேமிப்பு பகுதியான அல் பக்ர் மீதும் ஈராக் விமானப்படைகள் தாக்குதல் நடத்தின.

## கார்ட்டர் ஆலோசனை

யுத்த நிலவரம் குறித்து அமெரிக்க ஜனாதிபதிஜிம்மி கார்ட்டர் தன் ஆலோசகர்களுடன் ஆலோசனை நடத்தினார்.

யுத்தம் நீடித்தால் அமெரிக்காவில் எண்ணெ சப்ளை நிலவரம் எந்த அளவிற்கு பாதிக்கப்படும் என ஜிம்மி கார்ட்டர் ஆலோசித்ததாக கூறப்பட்டது.

## பாகிஸ்தான் முயற்சி

இதற்கிடையில், ஈரான் ஈராக்நாடுகளுக்குஇடையே சமரசம்செய்யும்முயற்சியில் பாகிஸ்தான் ஜனாதிபதி ஜியாஉல்-ஹக் ஈடுபட்டுள்ளார்.

இதற்காக, ஜியா, ஈரான் நாட்டுத் தலைநகரான டெஹ்ரானுக்கு வந்துள்ளார்.

ஈரான் தலைவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்திய பிறகு ஜியா ஈராக் செல்கிறார்.

## பிரதமர் இந்திரா கருத்து

கல்கத்தா வந்த பிரதமர் இந்திரா யுத்தம் குறித்து தெரிவிக்கையில் கூறியதாவது.

அண்டை நாடுகளில் ஏற்பட்டுள்ள நிலமையால் இந்தியாவின் பொருளாதாரம் பாதிக்கப்படககூடும்.

ஈரான்- ஈராக் நாடு யுத்தத்தில் ஈடுபட்டுள்ளதால் இந்தியாவிற்கான எண்ணெ சப்ளை பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது.

விரைவிலேயே இந்த யுத்தம் முடிவுக்கு வர வேண்டும்.

இவ்வாறு பிரதமர் இந்திராகாந்தி கூறினார்.

## இந்தியர்கள் தவிப்பு

ஈராக் நாட்டிலிருந்து குவைத்திற்கு தப்பி ஓடி வந்த இந்தியர்கள் பெரும் அவதிக்கு ஆளாக நேர்ந்ததாக, அங்கிருந்து நேற்று வந்து சேர்ந்த இந்தியர்கள் தெரிவித்தனர்.

ஈராக் நாட்டில் இருந்து தப்பி வரும் தங்கள் நாட்டவரை சந்தித்து நாடு திரும்ப பல நாடுகளின் தூதரக அதிகாரிகள் குவைத் எல்லையில் காத்திருந்தனர்.

இந்த அதிகாரிகள் உரிய அத்தாட்சி கடிதங்களை வழங்கிய பிறகே குவைத் அதிகாரிகள் அவர்களை குவைத்து உள்ளே வர அனுமதித்தனர்.

ஆனால் ஈராக்கில் இருந்து தப்பி வரும் இந்தியர்களுக்கு உதவ இந்திய தூதரக அதிகாரிகள் யாரும் வரவில்லை என, அங்கிருந்து பம்பாய் வந்து சேர்ந்த ஒருவர் கூறினார்.

தங்களின் உணவுக்குகூட மிகவும் சிரமப்பட நேர்ந்ததாகவும் மற்றொருவர் கூறினார்.

## மயங்கி விழுந்தார்

பம்பாய் வந்து சேர்ந்த பலர், தொழிற்சாலை யூனிபாரத்துடனே வந்தனர், நான்கு நாட்களாக உணவுயின்றி வந்து சேர்ந்ததாக பலர் கூறினார்கள்.

ஈராக் நாட்டில்இருந்து குவைத் வந்து நேற்று பம்பாய் வந்தவர்களில் ராகேஷ்குமார் விமான நிலையத்தில் மயங்கி விழுந்தார். பிறகு அங்கிருந்தோர் அவருக்கு முதலுதவி அளித்தனர்.

---

ரூ. 74 ஆயிரம் செலவில்

## பள்ளிகள்: அமைச்சர் குழந்தைவேலு திறந்தார்



சென்னை, செப். 28. மதுராந்தகம் வட்டம், பெரும்பாக்கம்கிராமத்தில் ரூ.40 ஆயிரம் செலவில் கட்டப்பட்ட கூடுதல் பள்ளிக் கட்டிடத்தையும், அத்திவாக்கம் ஊராட்சி ஒன்றியத்தில் ரூ. 34 ஆயிரம் செலவில் கட்டப்பட்ட பள்ளிக் கட்டிடத்தையும் அமைச்சர் குழந்தைவேலு திறந்து வைத்தார்.

---

ராதாகிருஷ்ணன்நகர் தொகுதி

## சிவகெங்கை சேதுராசன் கலைநிகழ்ச்சி

டாக்டர் ராதாகிருஷ்ணன் நகர் தொகுதி 17 வது வட்டம், சோலையப்பன் தெரு மண்டபத்தில் 30-9-80 செவ்வாய் மாலை 7மணிக்கு கே. ஜி. மணி தலைமையில் பலகுரல் மன்னன் சிவகெங்கை சேதுராசன் குழுவினர் கலைநிகழ்ச்சி நடைபெறும்.

ஐசரிவேலன், வண்ணை க. சண்முகம், வண்ணை மு. பாண்டியன், இ. மதுசூதனன் பி. ஜோதி, கணபதி என். பொன்னுசாமி ஆகியோர் உரையாற்றுவார்கள்.

---

# நன்றி! நன்றி!

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் அவர்கள் சென்ற ரயில் செல்லும் பாதையில் வெடி குண்டுகளை வைத்த கொலைபாதகச் செயலை அறிந்திருப்பீர்கள்.

அரசியல் அநாகரிகத்தின் உச்சகட்டமாக இந்த வன்முறையில் இறங்கிய கூட்டத்தை வன்மையாகக் கண்டிக்கிறேன்.

முதல்வர் புரட்சித்தலைவர் அவர்கள் நலமுடன் பயணம் செய்ய ஒத்துழைப்பு நல்கிய ரயில்வே அதிகாரிகளுக்கும், காவல்துறை அதிகாரிகளுக்கும் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ப. உ. சண்முகம்
பொதுச் செயலாளர்

---

## பிறப்பு

வந்தவாசி, தென்னாங்கூர் கிளைக்கழக அமைப்பாளர் ந. பரசுராமனின் மனைவி ப. சிவகாமிக்கு திருவல்லிக்கேணி கே. ஜி. குழந்தைகள் மருத்துவ மனையில் பெண்குழந்தை பிறந்தது. தாயும், சேயும் நலமாக உள்ளனர்.

## பேச்சாளர் முகவரி

லட்சுமி சண்முகம்
நெ. 10, பவழக்காரத்தெரு
சென்னை - 600 001

---

## அண்ணா பிறந்தநாள் விழா

சென்னை, செப். 28- அண்ணா கதர் கிராமத் தொழில் வாரிய தொழிலாளர் சங்கத்தின் சார்பில் காலை 9 மணி அளவில் குறளகம் கட்டிடத்தில் டி. தயாளன் தலைமையில் அண்ணா பிறந்தநாள் விழா கூட்டம்நடந்தது கூட்டத்தில் வை. பெருமாள், எஸ்.மணி, ச. கணேசன், கே. ஆர். அண்ணாமலை, எஸ். பி. சிவபெருமாள், பிரான்ஸிஸ், செல்வராஜ், முத்தரசன், எல்லப்பன், சந்திரசேகரன் வெங்கடாசலம் மற்றும் பலர் பேசினர்.

---

செங்கற்பட்டில்

## வகாப் நூல்வெளியீடு: நாவலர் பங்கேற்பு

செங்கற்பட்டு, செப்-28 அண்ணா தமிழ் இலக்கியக் கழகத்தின் தலைமை புரவலர் குழுச் செயலாளர்டாக்டர் வகாப் எழுதிய 'நூற்றாண்டில் பெரியார்' நூல் வெளியீட்டு விழாவில் நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கலந்துகொள்கிறார்.

வருகிற 29-9-80 திங்கட்கிழமை மாலை4-30மணிக்கு புத்தக வெளியீட்டு விழாவும் டாக்டர் வகாப் பொன்விழாவும் நடக்கிறது.

டாக்டர் நாவலர் இரா. மோகனரங்கம் எம். பி. எஸ். டி. உகம்சந்த் எம். எல்.ஏ, தே. சனார்த்தனம், ஆனூர் ஜெகதீசன் எம். எல். ஏ, திருக்குறளார் முனுசாமி, இரா. கல்யாணசுந்தரம், வலம்புரிஜான், ஔவை நடராசன் ஆகியோர் கலந்து கொண்டு பேசுகின்றனர்.

---

## ராதாகிருஷ்ணன் நகர் தொகுதி: 50 இடங்களில் பெருமாள் கொடியேற்றுவார்

டாக்டர் ராதாகிருஷ்ணன் நகர் தொகுதியில் இன்று 28ந்தேதி 50 இடங்களில் அண்ணா தொழிற் சங்கப் பேரவைச் செயலாளர் வை. பெருமாள் கொடியேற்றிவைக்கிறார். ஐசரிவேலன் இந்த நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு பேசுகிறார்.

---




# குறித்தகாலத்திற்கு முன்னதாகவே அசோக் லேலண்ட் கனரக வண்டிகள் தங்கள் சேவையை ஆற்ற வெளிவருகின்றன.

**இன்று, மாண்புமிகு தமிழக முதல்வர் திரு. எம்.ஜி. இராமச்சந்திரன் அவர்கள், ஹோசூர் தொழிற்சாலையில் உற்பத்தியைத் துவக்கி வைக்கிறார்கள்.**

நவம்பர் 25, 1979 அன்று ஹோசூர் தொழிற்சாலையின் கால்கோள் விழா நடைபெற்றது. அது முதல் அங்கு ஏற்பட்ட வளர்ச்சியின் வேகம் சொல்லில் அடங்க முடியாதது. இன்று, சரியாக பத்து மாதங்களுக்குப் பிறகு, தொழிற்சாலையும் தயாராக நிற்க, கனரக வண்டிகளும் தமது சேவையை அளிக்க முன்வருகின்றன— அதுவும் குறித்த காலத்திற்கு முன்பாகவே. இங்கு தயாராகும் கனரகங்கள்: 26T ஹிப்போ வகைகள், 23.5 T பீவர் வகைகள், 92 இருக்கைகள் கொண்ட டைடன் மாடி பஸ்கள் மற்றும் இந்தியாவிலேயே முதன் முதலான மல்ட்டி ஆக்ஸில் கொண்டதும், டர்போ சார்ஜ் என்ஜின் பொருந்தியதும், ஒரு லிட்டருக்கு அதிக அளவில் சரக்கு எடுத்துச் செல்லும் சக்தி கொண்டதுமான 18T டாரஸ்.

தொழில் வளர்ச்சியில் மிகவும் பின்தங்கிய ஒரு மாவட்டத்தை, தேசிய வளர்ச்சியெனும் நீரோட்டத்துடன் இணைத்துச் செல்வதற்காக அசோக் லேலண்ட் ஆற்றும் முயற்சிக்கு இது ஓர் எடுத்துக் காட்டு.

அசோக் லேலண்ட் லிமிடெட் எண்ணூர், சென்னை 600 057

**அசோக் லேலண்ட்**
**வளர்ச்சியெனும் சக்கரத்தின் தளர்விலா சுழற்சி**

SAA/AL/1371